உ

பரமபதி துணை

திருவாவடுதுறை ஆதினம்
சுப்பிரமணிய தேசிகமூர்த்தி பாடிய

செந்திலம்பதி

குமரக் கடவுள்பேரில்

# திருச்செந்தூர் மாலை

இஃது
இந்துஸ்தான் கீர்த்தனை பாடிய
கல்யாணிசுந்தரம்பிள்ளை அவர்கள்
பார்வையிட்டு

மதுரை
சென்றல் மார்க்கட்டு பஜார்
வடக்காவணிமூலவீதி
புக்டேப்போ
M. K. முத்துவிஜயதுரைக் கோனாரால்
மதுரை திண்டுக்கல்ரோட்
மகமதியன் பிரஸில் பதிப்பிக்கப்பட்டது
1913

[அணா 0-1-0]

உ

சிவமயம்.

திருச்செந்தூர்ஸ்தலம்

சுப்ரமண்ய சுவாமிபேரில்

# திருச்செந்தூர் மாலை.

காப்பு.

வெள்ளைவாரணப் பிள்ளையார்பதம்
உள்ளுவார்மனக் கள்ளமாறுமே
வள்ளலான முருகையர்பாதமே
உள்ளமேவினை யுண்மையாகுமே.

திருமகள்கொழுநன் மருகன்செந்தூர்வாழ்
சிவக்குமரன் றன்மெய்யாணும்
வருதமிழாலே திருச்செந்தூர்மாலை
மனமதுமகிழவே பாட
ஒருமருப்பைந்து கரமுளான்மதமூன்
றொழுகிய கரிமுகனை
பெருவயிற்றெங்கள் கணபதிசரணம்
பேணியே தொழுதிடுவேனே.

நூல்.

திருமகள்கானக் குறமகள்வள்ளிதெய்வகுஞ்சரிமணவாளா, மருவனா
ராறுபடையெனும்வீட்டில்வளர்ந்திந்தவுலசெலாநிறைந்தே, உருவ
ருவாகிச்சகலமும்படைத்த ஓம்பொருளானகர்த்தாவே அரிமருமக
னே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே (3)

மூத்தொழில்புரிந்தும்பழுதெனவுடல்மூவருங்கூடியோர்கலையாய்
கைத்தலம்பனிரண்டாறுமாமுகமாய்க்கரேவேலொன்றையுமேந்தி
ப்பத்ரீடேரவந்தகர்த்தாவே பாலனீடேறுநாளுளதோ, அத்தனார்
சேயேதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. 4

அன்றடல்புரிந்துஞ் செயமிலையெனவே யசுரர்களியைந்தநாள்பிறந்
தும். வென்றிடவுருபோ வென்றடல்வருகவேதனுங்கேட்டானே

# திருச்செந்தூர்மாலை.

புத்தி,யென் றுனைப்பணியாதிவனென வெண்ணி யிருவினைசூழ்ந்திட்ட
விதியென், றன் றுரைத்தாயோ திருச்செந்திற்பதிவாழ் அரகராகும
ரவேலவனே, 5

வகைக்கொரு செனன மெடுத்தலைன் றுழன்றவாதைபோதாதெனை
வெனக்கிங்,கிதத்தொடுபரத்துச் சிலையெனப்பிரமனெழுதினனிதற்ப
கொரு துணையாய்,செகத்தனிலேழைச்சென்மமீடேறச் சிறியனுஞ்
செய்பவக்கடலை, அகற்றிடுவாயே திருச்செந்திற்பதிவாழ் அரகராகு
மரவேலவனே. 6

பாதமேதொழுக வருகிலாதேனைப்பத்தர்பால்நடந்கலுத்தனையோ
வேதனையறுக்க வசுரர்மேல் விடுத்தவேல்முனைமழுங்கினதன்றோ,ஓ
திடவரங்கள்யாவர்க்குங்கொடுத்தே யோய்ந்துவாய்வந்ததோவறி
யேன் ஆதியேபரனேதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே

ஊத்தையில்நாற்ற மலசலஞ்சோரி யுறப்பழுவெலும்பொடுநரம்பும்
பித்தலொன்பதிலே யிரண்டுகால்நிறுத்திப் பெருமரத்தோலினா ல
மைத்து, காற்றினைப்பிடித்துக்கலசத்திலடைத்துக்காயமேயெடுத்தி
டுங்கவலை,ஆற்றிடுவாயேதிருச்செந்திற்ப திவாழ்அரகராகுமரவேலவ
னே. 8

கற்பிணிற் குத்தாட் கிணையெனச்சோரக் கள்ளியைமொழிவதுபோ
ல் விற்பனப்பாடுந் தமிழுக்கிணையெனவேவிளங்கினேனோர்தமிழ்மா
லை செப்புதற்கறியபெரியவரிகழார் சிவகுருபுகழதினாலே, அப்பனே
யெங்கள்திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. 9

மனையிருளகற்ற வைத்திடுஞ்சுடர்போல் மனத்துயர்பிணியெலாமக
ற்ற எனதுளங்குடிகொண்டிடக்கைகயில்நீய மிருள்வரக் காரியமே
தோ. உனையலால்வேறுகெதியிலையெனவே யுன்திருவுள மறியா
தோ, அனைவரும்புகழுந்திருச்செந்திற்பதிவாழ் அரகரா குமரவே
லவனே. 10

மடுவினினீச்சு மறிகிலார்விழுந்து மயங்கிடும்போதொருபகைவன்கொ
டுத்,தடியெடுத்து தலைபிளப்ப தபோல்நினைப்பணியாப்பகையிடிக்கக்
கொடுமைகள்மிகுத்த,வுடல் தன்மயமைத்துக் குன்றகன்போதாதெ
னப்பிணியால்,அடிமையைவிதித்தாய்திருச் செந்திற்பதிவாழ் அரக
ராகுமரவேலவனே. 11

செங்கையைநீட்டி வேல்விழிமிரட்டிச்சிற்றிடையசைந்தசைந்தாட்டி
ச்,கொங்கையைக்காட்டிக்காதலைப்பூட்டிக் கொடுமைகள்பலவுமுண்
டாக்கும்,மங்கையர்வலையிலகபபட்டாதுனது மலர்ப்பதம்போற்று
நாளுளதோ, அங்கசன்புகழுந்திருச் செந்திற்பதிவாழ் அரகராகும
ரவேலவனே. 12

எத்தனைதந்தை பெத்தனைதாயோ வெத்தனைபேருமிட்டாரோ,
எத்தனைபெண்டி ரெத்தனைபிள்ளையெத்தனைசாதியோ வடியேன்,
இத்தனையுடலமைததிடும்பரமற் கென்னநான் செய்திடுப்பிழையோ
அத்தனுர்சேயே திருச்செந்திற் பதிவாழ் அரகரா குமரவேலவனே

நான்முகற்கரசு கொடுத்திடும்போது நல்மதிசொலவில்லையோநீ, தா
னவமதியோ வெளியன்செய் வினையோசாத்திரப்படியிதுதானே, என்
னைப் பார்த்த விழிசெய்தவினையோவேங்கிடவிதித்தனையெனை
யே, ஆனைபின்னவனே திருச்செந்திற்பதிவாழ்அரகராகுமரவேலவ
னே. 14

பஞ்சபாதகத்துக்கஞ்சிடாமூடன்பாபமொன்றினுக்கஞ்சானெனவே, செஞ்
சினினினைந்து தண்டுசூலெடுத்து நெருப்பெழக் காலனுர்வருமுன்
வஞ்சனீடேறக் கடாட்சமேபுரியமயிலினமேலேறியேவந்தின், கஞ்
சேலென்றருள் வாய்திருச்செந்திற்பதிவாழ்அரகரா குமரவேலவனே.

ஓதுமந்திரத்தை மறந்தனே தவஞ்செய் துனைத்தொழாதிருந்தனே
வின்று, பேசதிக்கவடபாற்போயிருந்தனையோபுனக்குறமகள் தரு
மயலோ,எதுக்கென்முறைதான் திருச்செவிகேளாதிருந்ததோவறிகி
லேனையா, ஆதியேபரனே திருச்செந்திற்பதிவாழ்அரகராகுமரவேல
வனே. 16

செந்தமிழ்மாலைகொண்டு நின்பதந்தெரிசித்துக் கதிபெறவடிவைக்,கி
ந்தநாளொருக்கும் பூக்கொண்டுசாற்றியிறைஞ்சிடப்புத்திபோதாத
மைந்தனுக்குனது சரணகடாக்ஷம்வருகுமோதெரிகிலேனடியேன்,
அந்தகன்பணியுந்திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே.17

பெருந்தவமிருந்தோருன்புகழ்பாடப் பெற்றிலார்நான்பெற்றதே
னோ ஒருவனிப்போதுகின்னடியமர்க்கே யூழியஞ்செய்தலால்நடந்
து, வருமவழிதாசென்மேல்வருப்பலனோ வாய்வழி திறந்தோவறி
யேன், அருந்தவப்பொருளேதிருச்செந்திற்பதிவாழ்அரகரா குமர
வேலவனே.

சஞ்சலம்பொய்யும் வறுமையும் பிணியுஞ்சளமெலாம் புவியெங்குந் திரிந்தாற, ரஞ்சமென் றெளியோர் மேல்வருமென் று தானதையோர்முகமாக்கி,வஞ்சகந்தனையேநினைந்ததுமல்லாமற்பிறவிக்காளாவதெப்படியென், றஞ்சுதேநெஞ்சந்திருச்செந்திற்பதிவாழ்அரகரா குமரவேலவனே. 19

ஞானியர்தவிர்க்குமாசையும்பாச நாற்றிசையெங்குமேயிருக்கத், தானிடமில்லையென்றெண்பங்கிலிருந்தகளற்றினுலுடைலமுமெடுத்தேசனரைக்கள்ளவாசையும் பாசமேயிடவழியெங்கேசொல்லும், ஆனைபின்னவனே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. 20

நல்லறிவுடனே யுனைநினைந்துருகி ராப்பக லர்ச்சனைபுரிந்தும்,தொல்புவிவலம்வந்தறங்களேசெந்துந்துலங்கவே யாகங்கள் வளர்த்தும் வல்லவர்க்கரிதாநின் பதச் சவைவறியன்கணடுருகுகாளுளதோ, அல்லலையகற்றுந்திருச்செந்திற்பதிவாழ் அரகரா குமரவேலவனே. 21

யாவருஞ்செய்யாவினைசெந்தானிவனுக்காக்கினையே தென்றுமறவிதேவரைக்கேட்கநாகமேழதனிற் சேர்க்கவுங்கணக்கில்லையின்ற, யாவிக்கேழ்நரகக்குழியு முண்டாக்கிப் பகைத்திடத்தள்ளெனுமுடனே. ஆவதெனவெடுத்துத் திருச்செத்திற் பதிவாழ் அரகரா குமரவேலவனே.

மலக்குழிக்கிரைகள் தேடவும்பிணிக்குமருந்துதேமடவுந்தான்தேற்றுக்.கலங்கமுற்றிடவும் பெண்பிள்ளைசுற்றங்கடுரமாட்டிடப் பொருதாச்சே, சலத்தொடுபூக்கொண்டுனைத் தொழவெனக்குத் தானினிப்பொழுதெங்கேநாயேன், அலைச்சலைச்சவிர்ப்பாய் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. 23

காக்கின்றதொழிலு மரியுமாகையினுல் கணக்கில்லாவுயிரெலாங்காத்து,மூரக்கனைக்காக்கவருகு மிவ்வேளை மூடனுற்றரவில்மேற்படுத்தான், பார்க்குளேநீயுமெனமுகப்பார்த்துப் பாலனைக்காத்திடாதிருந்தால் ஆர்க்கெடுத்துரைப்பேன்திருச்செந்திற்பதிவாழ்அரசராகுமரவேலவனே. 24

பத்தர்கள்ன்புநிலைகண்டுமோக்ஷம்பாவிபபரையெனபுகழ்வார்கள்காத்தனையதுக்கோவென்னிலைதனையேகாணவிப்பார்முகமானுல் சத்துவயில்லை நீயறிசுவையே தன்னுளே திருவுளமிரங்கும் அத்தனேகுகனே திருச்செந்திற் பதிவாழ் அரகராகுமரவேலவனே. 25

செங்கமாறும்பன்னிருவிழியுஞ் சிறந்தபைங்கடம்பந்தார்மார்பும்.நம்
யுனோர்வினையை யறுக்கும்வேற்கரமும்நவமணிக்கிண்கிணிச்சிலம்
பும்-உன்முகமாறுங்கலகறென்றுமுபயபாதாம்புயமலரும். அன்பு
வைத்தருள்வாய்திருச்சந்திற்பதிவாழ்அரகராகுமரவேலவனே 26

ககனமுமுட்டவெண்கிரிக்கதிகாயமு மெடுத்தலைந்தேன்தாய்முகம
துபார்த்துக்குடித்திடுமுலைப்பாற்மொவ்வுமோபெருங்கடலாகும் து
கையிலாக்குழந்தையெனவடிவாகித்தோய் தண்ணீர்வான் கங்கைநீ
ரோ, அகங்குடியிருக்குந் திருச்செந்திறபதிவாள்அரகராகுமரவேல
வனே. 27

காக்கின்றதெய்வங்கடும்பலிகேட்டாற் கவலையையொன்றென்றுரு
டுத்தின், கேற்கைய்யாய்ச்செய்வதியாருடன்சொல்வே னினிவொரு
தெய்வமு முனைப்போல் பார்க்குளுமிலையேயென்முகஞ்சற்றேபா
ரையாவிதுநல்சமயம், ஆர்க்குமெய்ப்பொருளே திருச்செந்ற்பதிவா
அரகராகுமரவேலவனே. 28

கூட்டிலிற்குள்ளே வினையுமெஞ்ஞானக் குறிப்பாய்மலே கிடந்து
வாட்டமாய்மயங்கினின்பதாம்புயத்தை வணங்கிடப்புத்தியோதாது,
காட்டுமிவ்வுருவுஞ்சூத்திரப்பர்வைக் கயிற்றினல் தொந்தொந்தமெ
ன்றே, ஆட்டியமுத்தா திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேல
வனே, 29

கன்னலைகாட்டி யானையைக்கொப்பங் கதறிடச்சேர்ந்துமாபொலே
மின்னனையார்க ளாசையைக்காட்டி வீணிலேயுழலவும் விதித்தாய்,
பன்னகா பரணன்றனக்குபதேசம்பகருஞ்செம்பவள வாயோனே:
அன்னைபிதாவே திருச்செந்திற் பதிவாழ்அரகராகுமரவேலவனே

நம்வினையிருக்குமிடமெல்லாந்தேடி நல்லருள் புரிந்திடவேதான்
தெனபுடணிரண்டு, ழிபற்றுதென்வேசரவும்பணிரண்டுபடைத்தாய்
உம்பர்காணவென்பிணிவறுமையோட்டிடப்பார்த்திடாதேனே அ
ன்பருங்கன்பாதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே 31

கல்லும்வல்லிரும்புமுலைமெழுகாகிக்கரைந்திடு மென்சொலுக்கிரங்கி
வல்லநெஞ்சகமு மதிலுங்கொடூரம்பிரமோகருமலையாம்மா நல்ல
தையாவுன் திருவிளையாடல்நாயினுங்கடையனேவறிவேன், அல்ல
மர்பொழில்சூழ் திருச்செந்திர்பதிவாழ் அரகராகுமரவேலவனே.

செட்டிநானெனப்பெரெடுத்ததுமேதோசேவகமுனையெலாம்விட்டு
மட்டிலாயென்றன்வினைகளையறுக்கவலுவிலாதாகையினாலே முட்
டினுமென்மேல்தயவிலாதேனோமுற்பகைபிற்பகையுண்டோ அட்டி
யேன்காக்கதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே 33

யாவர்க்கும்வியாசர்வருத்தன்றன்மறைகளடியவர்க்குதவிடச்சொல்லி
நீவலியவனாய்ப்பயந்துனைக்கொண்டு நிசமதைச்சொல்லவுமில்லை
யே, ஆவதினாலே நீபராமுகமா யாகினானென்ன செய்வேன் ஆவி
னன்குடியாய் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே 34

சாதியிலீனக்குடமகள்மீறுந்தந்தி செய்வாழ்க்கையாலிருந்து நீதி
போகாநினைவினாலென்னை கெடும்பவக்கடலில் வீழ்த்திப், பாதகன்
றனையுமுழலவேவிதித்தாய்பத்தருக்கெளியகர்த்தாவே, ஆதியேமு
தலேதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே 35

மாதவமிருந்தும்புண்ணியதீர்த்த மாடியுங்கரதலாற்றொழுதும் நீதி
யாய்நடந்துமறத்தையேவிரும்பிநின்பாதம்புயந்தொழுதுருகி, ஓதி
மெஞ்ஞான வழிகண்டுநடந்துமுயர்கம் பெறவியருள்வாய், ஆதி
மால்மருகாதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலனே. ௩௬

ஓடுநீர்க்குமிழியோவிழுஞ்சுவரோ வைப்பிட்டபாண்டமோமன்னும், ஆ
டும்பம்பரமோசந்தையிற்கூட்டமதுகசெல்லாநிலையுண்டுசற்றே, வா
டுமிவ்வாழ்க்கைக் கவ்வளவெனினு மதிப்புண்டோநிலையுண்டோ
சொல்லுமா ஆடுமயூராதிருச்செந்திற்பதிவாழ் அரகரா குமரவேலவ
னே ௩௭

ககனமீதாடுமழைமின்னலதனையே கரேமாயிருள்வந்துமறைக்கும்
உகமையைப்போலென்கூட்டினிலிருந்தே யொளியிடுஞானத்தைநம
றைக்க, செகப்பிர்மருசமாயைக்கொடுத்து தெளிந்திடாதென்மனம்
வினையிலகப்படவிதித்தாய் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவே
லவனே. ௩௮

மாற்றுயர்பொன்னிற் பித்தளைகூட்டி வைத்திடுமாறுபோலுனையோ
தோத்திரஞ்செய்தவடியனைக்கூட்டிச்சுத்தனென்றருளுநாளுளதோ
மாற்றலர் சமணர்வெங்கழுமேலேற்றிமாறனைக்கூனினைநிமிர்த்தும் அ
ற்றல்சேர்முருகாதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே ௩௯

தேவர்க்குநால்ரண்டாயுதமிருந்தாலுஞ் சேர்ந்தனர்பகைகளையுனக்கின்
கேவலேபனிரண்டாயுதமிருந்துமென்பகையறுத்திடாதேனோ, பூவு
லகத்திலென்றைச்சூங்குழந்தைப் பிள்ளையாயிருந்ததினாலே, ஆவி
னன்குடிவாழ்திருச்செந்திர்பதிவாழ் அரகராகுமரவேலனே. 40

பண்டிருந்தயனார்முன்சிறையிருந்தபய்முண்டு நின்னடியார்மேல், ச
ண்டைவராமற்கதிபெறவிதிப்பன்தானவரசுக்குவேறேமுண்டகவொ
ருவன்புதியன்வந்தானோமுழ்கவேவினையினால் விதித்தாய், அண்ட
ர்நாயகனே திருச்செந்திறபதிவாழ் அரகாரகுமரவேலலேல. 41

புதுப்பிரமாவைச்சிறையிடவலிபோதாதெனவேவாமலைபுகுந்தாய், ச
திசெயுமரசுர்மாண்டவரெழுந்துசண்டைக்குவருவாரென்றெண்ணியோ
இதமுடன் புவியிலிருந்திடுவோர்க ளியலபெண்ணியோவறிகிலனால்
அதிகமாய்விளங்குந் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவ
னே. 42

மார்க்கண்டன்மீதினமன்வன்வந்துபட்ட வாதைதனைத்தான்மறந்தெ
ன்மேற் போர்க்குவந்திடு முன்னவனமட்டமாறறிப் புதுசொருவ
னைவைத்துப் புதைக்கி மூர்க்கமாயெந்த னடியற்மேற்செல்லமுறைக
ளுமிலையெனச்சொல்வாய் ஆர்க்குமெய்ப்பொருளே திருச்செந்திற்ப
திவாழ் அரகராகுமரவேலவனே 43

நாகத்தின்கூடக்கிரியோர்புற்றில் நாள்தொறுங்குடியிருப்பதுபோ
ல்தேகத்தினுள்ளேயுயிர்கிடந்துழலததிவினையயற்றிவைத்தாயே நீகே
ர்த்தனாகியுனக்குநானடிமையிலையுடனிருந்ததும்பொய்யோ ஆகமம்
பொருளே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே 44

அல்லுநன்பகலு முனைநினைந்துருகும்டிமையையிகழ்ந்திட்டானுன
க்குநல்லதோயுலகுக்கடுக்குமோவிதுதான்ஞாயமோ தர்மத்துக்கழ
கோ வல்லமைசெலுத்தப்பகைவருமிலையோமைந்தன் மேற்பகையு
ண்டோவினக்கு அல்லலையகற்றுந் திருச்செந்தூர்பதிவாழ் ஆரகார
குமரவேலவனே 45

பலபலதுயரம்நாழிகைக்கொருகால் பார்த்தலைந்துழலுமைம்பூதம்
விலகவிடாமலொருமுகமாக்கிவிரும்பியேயுனைத்தொழுவேனோ கலை
பலவுணர்ந்த நாவலர்க்காதேகர்த்தனேகருணையங்கடலே அலரவன்
பரவுந்திருச்செந்திர்பதிவாழ் அரகராகுமரவேலவனே 46

சகலமுமறிவார் பிறந்திறந்துழலுஞ்சாகரநீங்கிடமருந்து செகமதில
றியார் செய்துமோகதிதான திருப்பரங்கிரிமுருகையா மகபதிக்கர
சுகொடுத்தகர்த்தாவே வளளிகுஞ்சரி மணவாளா அகிலமேழ்புகழு
ந்திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே 47

செனனமேயெடுத்துப்பிறந்திடும்பொழுதுஞ்செல்வந்தான் கொண
ர்ந்தவரில்லை.மனதுயிரிந்தேயுயிர்விடும்பொழுதும்வாரிபோனார்களுமி
ல்லை' வினையனுகாதபடிவற்சற்றேவேறொருசாரியமவருமோ,அனை
வரும்புகழுந் திருச்செத்திற்பதிவாழ்அரகரா குமரவேலவனே.

பூவினிற்சலந்தவாசுமேபோ லென்பொய்நெஞ்சிற்றீபம்போனியும்
மேவினதறியாதேதினந்தோறும்வீணிலேயலைந்தென்னபலனோ சா
வகைநிறுத்தும் பேருண்டோவுபய சரணத்தைகண்டு வந்
தேனே.ஆவியேவிழியேவிழியேதிருச்செந்திற்பதிவாழ், அரகராகு
மர வேலவனே. 49

சாகவிடாதேவிதியினால்செத்தால்தரணியிற்சேனனமேயெடுத்துப்
போகவிடாதேபோயினுமறலி புகல்கின்றவாக்கினைக்களாய், ஆகவி
டாதேயாயினுமுன்றனருள்பதந் தன்னைமறவேன், ஆகமப்பொ
ருளே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலனே, 50

பயிலுகள்பேசி யடிக்கடிசிரித்துப் பருவத்தின்காதலைக்காட்டிக்
கயல்விழிமிரட்டித் தண்டைகிண்கிணி சோர்காற்சிலம்போசையைக்
காட்டி, மயலுகள்பூட்டுக்கன்னியராசை வலைக்குள்ளேயகப்படு
வேனோ, அயர்விலார்புகழுந் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமர
வேலவனே. 51

படுத்திடும்பொழுது மெழுந்திடும்பொழுதும். பட்சணஞ்செய்திடும்
பொழுதும் கொடுத்திடும்பொழுதும் நடக்கின்றபொழுதும் கோ
கோதையர்கலவியின்பொழுதும அடுக்குகள்செய்யும் போழ்துமெ
ங்கேனுஞ் சுகதுக்கம்வந்திடும்பொழுதும், அடிக்கடிமறக்கேன் தி
ருச்செந்திற்பதிவாழ் அறகராகுமரவேலனே.

பொய்தனையுரைத்தால்புழுநரகென்பார்பொய்விட்டுக்கலியுகமதனில்
மெய்சொல்லாப்பாவி யெனக்கென்னபலந்தான்மேதினிதனிலொன்
அங்காணேன், தும்பனே யிதற்கு போம் வழி சொல் லுஞ்

சோற்றினால் வருங் கதிப்பேச்சே ஐயனேமுருகா திருச்செந்திற்ப
திவாழ் அரகரா குமரவேலவனே. ௫௩

சகலமும்படித்தோர் படிப்பெலாங்கூடிசமன்வருநாளெதிர்
நின்ற, பகைவெலுமோவுன் பதாம்புயந்தனையே பாடினாலவன் வரு
வானோ, இகலசுரேசர்கிரவுஞ்ச கிரியுமேழ்கடல்தூள்படப்பிளந்த,
அகிலநாயகனே திருச்செந்திற்பதிவாழ்அரகராகுமரவேலவனே௫௪

கடல்வடகுவடுபுவியொடுசேடன் ககனமுந்திடுதிடென்றதிர;
நடமிடுமயில்மேல் வருகின்றபவனி நான்கண்டுபணியுநாளுளதோ,
இடர்செய்தபேர்களோடிடக் கூவுமினியசெஞ்சேவலங்கொடியை,
அடைவுடன்பிடித்தோய்திருச்செந்திற்பதிவாழ்அ ரகராகுமரவேல
வனே. ௫௫

தொங்கியதோலைக் குய்மெனக்காட்டிச் சூரைநாற்றமெழுமி
தழை, உண்கெனக்கொடுத்து மூத்திரக்குழியிலோர்விரல்விடுக்
கவேபடுத்துச், செங்கையின்பொருளைப்பறிப்பதுமல்லார் தீவினை
விக்லைகுமங்கயர்கள், அங்குறவாமோ திருச்செந்திற்பதிவாழ் அர
காரகுமரவேலவனே. ௫௬

தாயினுமினிய சண்முகத்தரசே சாற்றியவிண்ணப்பங்கேண்
மோ, பேயினுங்கடையேன் றன்னையேகாப்பார் பெருநிலத்தொரு
வருமில்லை, சேயினைக்காப்பாள் தாயல்லாதுண்டோ சேவலங்
கொடியுடையானே, ஆயனார்மருகா திருச்செந்திற்பதிவாழ் அர
கராகுமரவேலவனே. ௫௭

தேடியதனத்தைப் புதைப்பர்களந்தத் திரவியந்தோற்றிடில்
மனது, வாடியேகலங்கியுயிர்விடுவார்கள் மற்றவரென்றுபெருவா
ரோ, நீடியவுலகில்சிவசமயத்தை நிலை பெறக்காத்தகர்த்தாவே,
ஆடியமயிலா திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேல்வனே. ௫௮

பகலுடனிரவுமிடைவிடாதுனது பாதமென்சென்னிமேல்
வைத்துச் செகதலமாயை முழுதையுந்தள்ளிச் சிந்தைநைந்துருகு
நாளுளதோ, தக்ககவெனவேவருமதியிரவி தன்னினுமதிகசெஞ்சு
டரே, அகிலமெழுபுகழுந்திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேல
வனே. ௫௯

சாம்பலோர் பிடியாய்ப் போகின்றவூத்தைச்சடலத்தையெடுத்ததுமல்லாமல், நான்பிணிதுயரிற் நலியினல்வருந்த ஞாயமோ வேடிக்கைதானே, தேன்மலர்சூடிமான்மழுவேந்துஞ் சிவகுருபர முருகையா, ஆம்பல்சேர்நதிசூழ் திருச்செந்திற்பதிவாழ் அரகரா குமரவேலவனே. ௬௦

யார்பிழைத்தாலென்யாரிருந்தாலென் பாருறவாகிலுமென்ன, கார்முகில்போலேயெருமைக்கடாவில் காலனார்வந்திடும்பொழுது, தேறுதல்சொல்லி நிறுத்தவும்வல்லார் தேவனேநின்னையல்லாமல், ஆருளாரையா திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௬௧

துன்பமுமின்பமுமொன்றுமில்லாது துலங்கியபரஞ்சுடராகி உம்பர்கள்மூவர்தண்மதியிரவி யுலகம்விண்யாவுமாய்நிறைந்தே, எம்பெருமானுயடியவருளத்தி லிடைவிடாதிருக்கின்றதேவா, அன்பருக்கெளியா திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௬௨

கொண்டுநின்னருளே மனிதனல்தவசில்கொடுவினைதள்ளலாமன்றிப், பெண்டுபிள்ளைகளால் தள்ளவும்படுமோ பேதையர்செய்வகையுண்டோ கண்டுனைப்பணியுமுணர்வில்லைவேறு கதியில்லையிதற்கென்ன செய்வேன், அண்டர்நாயகனே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௬௩

உத்தண்டமாகச்சமன்வந்தாலென்ன யுகமுடிவிடிவந்தாலென்னசத்தசாகரங்கள்பொங்கினுலென்ன தரணியர்பகைவந்தாலென்ன பத்தரைக்கண்டால் பயப்படாதுண்டோ பணிமலைமகளுமைமகிழும், அத்தனார்சேயே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௬௪

விடியுமுன்னெழுந்துதீர்த்தங்களாடி மெய்யெலாம் விபூதி ருத்திராட்சம்,வடிவமாய்ப்பூண்டுநின்பதமதனை வணங்கிடப்பத்தியைதருவாய் பொடிபடவசுரர்குலமறவீட்டிப் புரந்தரர்க்கரசுதந்தோனே, அடியவர்க்கெளியாய் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௬௫

சீயென்றுலந்தவிடத்தில் நில்லாது சீரியேபோய்விடுந்தூரம், நாயறிவில்லாச் செனனமேயெடுத்து நானினென்ன பாக்கியங்கண்

டேன், வேயிசை தொனிகேட்டாவினை தடுத்து என்னையிருடி வரக்கு முள்ளத்தாசினையகற்றுந் திருச்செந்திற்பதிவாழ் அரகரா குமாரவேலவனே. சுசு

கட்டிநோன்பதனைச் சாதித்துநின்ரோர் தமிழினுலினைப்பணிந்துயர்ந்தார், கிட்டையிலிருந்து பூசை செய்திட்டார் நினைவிலே பத்திவைத்துயர்ந்தார், துட்டனேனதிலோர் தூசுமாத்திரந்தான் தொண்டுசெய்திடுநிலைவருமோ, அட்டதிக்கதிபர் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. சுஎ

மானிடசெனனமெடுத்தவர்க்குள்ளே வகையிலாப்பாவிநானொருவன், ஏனிவன்செல்வமிலையதினுலேயீகையுந்தருமமுமிலையே, நாணினிமோக்ஷம் பெருவதெப்படியோ நலமிலாவறுமையினுலே, ஆனைபின்னவனே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. சுஅ

திருவிளையாட லறுபத்துநாலுந் தென்மதுராபுரித்தெருவில், ஒருசிவன்பார்த்தானப்படிப்பார்க்க வுள்ளத்திலெண்ணியேபிறவிக் கருவிளையாட்டாலமர்த்தியே யிந்தக் கர்மத்தைக்கண்டனையையா, அரிமருமகனே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. சுகூ

பைந்தமிழ்தனையே யகத்தியன்றனக்குப் பகர்ந்த செம்பவளவாயோனே, தந்தையர்கருத்திற் பொருள்விரித்தோதிச் சற்குருவாகியதேவா, இந்துவுமிரவிபோலவேநின்றிங்கெங்குமே யிலங்கிய சோதி, அந்தகன்பணியுந்திருச் செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. எய

பெண்டுகள்பிள்ளை தந்தைதாய்சுற்றம்பிறப்பொடு நட்புகளெல்லாம், உண்டிடம்பேசு முறவுகளாவாருயிர்த்துணையாவரோகூடக், கண்டிருந்தவரைத்தள்ளலாமென்ருல் கலக்குதேபிரபஞ்சமாயை, அண்டர்நாயகனே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. எக

யுகமுடிவதனிலெழுகடல்பொங்கு முவமைபோலார்ப்பரித்தெழுந்து, செகதலமதிரவடகுவடிடியச்சிந்திடவிண்முகடெங்கும், பகையசுரேசர் பொடிபடவும் பாரப்பிரசண்டவேற்கரனே, அகிலமேபுகழுந் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. எஉ

ஆர்ப்பரித்தெழுந்துசிரசினைவிரித்தே அகோரமாய்ப்பாய்ந்திடும் விசையில், ஈரற்றிசையதிரச்சேடனுருடலம் நடுங்கக்கொத்திடுமயில் மேல் தோத்திரஞ்செய்யவந்து முன்னின்று துயர்பிணிவறுமைக ளெல்லாம் ஆற்றிடுவாயே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௭௩.

படபடென்றடித்துச்சிறகினையுதறிபார்விண்ணுமதிரவேகிரிகள் வெடிபடக்கூவுஞ் சேவலங்கொடியை விருதெனப்பிடித்தகத் தாவே, நெடியமால்மருகா வாவிளங்குடிவாழ் நின்மலாபார்ப்பதி குமரா, அடியவர்க்கொளியாய்த் திருச்செந்திற்பதிவாழ் அரகரர குமரவேலவனே. ௭௪

தனமதில்லாதானெவர்க்கும்பொல்லான், தந்தைதாய்குருவுக் கும்பொல்லான், மனைவிக்கும்பொல்லான்மைந்தர்க்கும்பொல்லான், வையகத்தோர்க்கெல்லாம்பொல்லானெனச்சொலல்போல உனைப்ப ணியாமலெமனுக்கு நான்பொல்லானானேன், அனைவரும்புகழுந்திரு ச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௭௫

சோம்பியேவெயிலிலலைகின்றதவளைசுற்றியேநிழலுங்காணமல் பாம்பெடுத்திருக்கும்படம்நிழலெனவெ படுத்திடும்வகையெனச்சட லம், வீம்பினிலெடுத்தேன்கதிவருமென்றுவினைக்கிரையாச்சுதென னுடலம், ஆம்பல்சேர்தடஞ்சூழ் திருச்செந்திற்பதிவாழ் அரகராகு மரவேலவனே. ௭௬

சொர்க்கபாதாளமதிரவேபச்சைத்தோகைமாமயில்மிசைவருவா ய், தர்க்கமிட்டோர்களுடல் பொடியாக்கித் தாளிணைபணியவேயு வமை, விக்கினந்தீர்க்குமிடும் பிணிதீர்த்தாள்வேண்டியேகொண்டமு த்தையா, அக்கினிச்சுடரே திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவே லவனே. ௭௭

செந்தமிழ்ச்சுவையே யறுசுவைரசமே தேவருக்கினியதெள்ள முதே, மந்திரமுதலேகருணையங்கடலே வள்ளலேயறுமுகத்தரசே, சந்தனப்பொதிகை முனிதினம்பரவுஞ் சரணனேதனிவழித்துணை யே, அந்தமிழ்புகழ்சேர் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேல வனே. ௭௮

பஞ்சபூதமுமாயுடலுயிராகிப் பரிவிழியிரண்டுமாக்குந்தன், நெஞ்னிற்குடியாயெங்கெங்குமாகி நிறைந்திடுகின்றநற்சோதி, வஞ் னீடேறக்கடாக்ஷமேபுரிந்து வருங்கலிபிணியெலாந்தீர, அஞ்சலென் றருள்வாய்திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௭௯

செந்தமிழ்க்கிரங்கிப்புகழுநற்கீர தேவனார்சிறைதனைவிடுத்துச் சிந்திடவேதான் பேழைவாய்ப்பூதஞ் சின்னபின்னங்களாய்ப்பிழந்த கந்தனேசிறியமைந்தனேற்கருள்வாய் கனகமுந்நூலணிமார்பா, அந் தகன்குருவேதிருச்செந்திற்பதிவாழ் அரகரா குமரவேலவனே. ௮௦

ஞானமேதெளிவுற்றுசாபாசங்கள் நாற்றிசையெங்குமேவிரிய வானவரறியாநின்பதகமலம்வாழ்த்திடப்புத்திபோதாத, ஈனரைத்த டுத்தாட்கொளத்திருவுளந்தா னிரங்குமோவிரங்கிடாதோசொல் யானைபின்னவனேதிருச்செந்திற்பதிமாழ் அரகராகுமரவேலவனே

சுற்றியேபூத்தபத்திரநடுவே துலங்கியசலமதுகுடியா, அத் தன்மைபோலே கலிதுயர்ப்பிணியுமழிவின்றிக்குடிகொண்டநெஞ் சில், தத்துவமில்லா தோருயிர்கிடந்து தவிக்குதேயிதற்கென்ன செய்வேன், அத்தனேயெங்கள்திருச்செந் திற்பதிவாழ் அரகராகும ரவலவனே. ௮௨

கொலைத்தொழில்புரியும்பூனைபார்கிளியைக்கொண்டுபோய்விட் டதுபோலப், பெலத்துடனிருக்கு மவன்பிணிகலிநோய்ப் பெருந்து யர்வந்தணுகாமல் நலத்துடனுனது, கிருபையேதந்துநாடியேபக்ஷ தந்தென்றன், அலைச்சலைத்தவிர்ப்பாய் திருச்செந்திற்பதிவாழ் அர காராகுமரவேலவனே. ௮௩

இப்புவித்தூசென்றுயிரம்பங்கா யிடிலொருபங்குக்கெவ்வள வும், தப்பிலாநேரம்வரையுநில்லாத சடலத்தையேயெறித்துனது செப்படிவித்தை சித்திரத்தொழிலுஞ் செயலையாரறிவரோ சொல் லும், அப்பனேயெங்கள் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேல வனே. ௮௪

நல்லறிவுடனேசெந்தமிழ்பாடி ராப்பகலினைநினைந்துருகி,வல்ல வனருணைகிரியெனுநாதன் வருங்கதிபெற்றதுபோல, புல்லறிவினனு ம்புலையனுக்கந்தப் புகழுறியாக்கதியுதவி, அல்லலையறுத்தாள் திருச் செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே ௮௫

மாதவப்பொருளே முழுமணிவிளக்கே மாற்றுயர்தங்கமே தே வர், ஓதுமெஞ்ஞானக் கண்மணியொளியே உயர்ந்திடும்பரகதியளிக் கும், ஈனபழனிமலைக்கதிபதியே யிருவினைதனக்கொருபருந்தே, ஆ தியே குழகாதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலனே. அசு

வாதுக்குநின்ற மன்னர்போற்பார்த்து மனமதுவெந்துவேருகி ஏதுக்குப்போர்செய்கின்றனையையாளடுப்பது தலைச்சுமையுண்டோ காதற்றவூசிவருவதுமிலையேகவலையில்மூழ்குவதேனோ, ஆதித்தன்புக ழூந்திருச்செந்திற்வாழ் அரகராகுமரவேலவனே. அஎ

குஞ்சரிகொழுந வென்றைக்குஞ்சின்னக் குழந்தையேபால குமரா, மஞ்சுகாத்தாவேகலைமகட்கினியபாகனே மலைதொறுஞ்சிற ந்த, செஞ்சுடர்போலேவிளங்கியசோதி சிறியன் செய்வினையெல் லாம் பொறுத்தே, அஞ்செலென்றருள்வாய் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. அஅ

பஞ்சபாதகனுணருந்திடும்புலையன் பாவியேன்கருமசண்டா ளன், வஞ்சகன்பொய்யன் தந்தைதாய்குருவை வைதவுனிலையிலாத் துரோகி, கொஞ்சநாயடியேன்செய்திடுங்குற்றங் குறையெலாந்திரு வுளம்பொறுத்தே அஞ்சலென்றருள்வாய் திருச்செந்திற்பதிவாழ் அர கராகுமரவேலவனே. அசு

வைவதுமுனையே வாழ்த்துவதுமுனையே வணங்கியேபோற்றுவது னையே, செய்யனேவரங்கள் கேட்பதுமுனையே திருவுளச்செயலு மெப்படியோ, மெய்யர்க்குப்மெய்யா பொய்யர்க்குப்பொய்யா விள க்குமின்மகிமையாரறிவார், ஐயனேயெங்கள் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே கூ0

ஈசனார்கழுத்திலிருந்திடுஞ்சற்பமேன்பிள்ளாய்கெருடனென்ற துபோல், வாசமாய்நீயுமென்பங்கிலிருந்தால் வரும்பலன்கனதுயர் ணிநோய், பாசமாம்வினைகள்பொடிப்பொடியாகும், பார்தனிலெ வருக்கு முள்ளத்தரசினையகற்றுந் திருச்செந்திற்பதிவாழ் அரகரா குமரவேலவனே. கூக

காலையிலெழுந்தால்மலக்குழிக்கிரைகள்காணவேதிகைத்திடுநெ ஞ்சம், போலவுமுயிர்க்குவழித்துணையாகப் புண்ணியகதிதனைத்தே டச், சாலவும் புத்திகொடுத்திடாதென்னோ சரவணந்துறைமுருகை யா, ஆலையர்புகழுந் திச்செந்திற்பதிவாழ் அரகரா குமரவேலவனே.

டைச்,சாலவும்புத்திகொடுத்திடாதென்னே சரவணத்துறைமுருகை யா ஆலையர்புகழூந்திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே

பாவபுண்ணியத்தையளவிட்டுப்பார்த்துப் பயத்துடனிருந்திடு ம்பெரியோர், சேவடிமிதிக்குங்கல்மண்ணுந்தூசுஞ் சேர்வதிற்றரு வெனப்பிறந்து, சாபத்தைத்தீராக்கதிபெராமனிதன் சடலத்தை யடுத்தலைவேனே, ஆபத்தைத்தீர்க்குந் திருச்செந்திற்பதிவாழ்அரத கராகுமரவேலவனே. கங

பொன்மயமுடனே பொன்மாரிபொழியப் பொருந்தியதுந்து மியார்ப்ப, நன்மறையுடனேபைந்தமிழ்முழங்க நாரதர்கீதங்களா ட, இன்பமாய்த்தேவரிருபுறஞ்சூழ்ந்தே யிறைஞ்சிடுஞ்சபைதனைக் காண, அன்புவைத்தள்வாய் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமர வேலவனே. கச

முத்தமிழ்மாலையறிவில்லார்ப்பாடுளுறைமைகளேதப்பினாலும் குற்றங்கள் குறைகளிருக்கினும்பொறுத்துகுடியிருந்தென்பங்கில்நீ யும், நித்தமும்வந்துகடாக்ஷமேகொடுத்து நெஞ்சினில்நினைவுதய ளிப்பாய், அத்தனார்சேயேதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவே லவனே. கரு

நலமிகும்பொருளே நதிகொங்குவஞ்சிநகர்பச்சைமலையுள்ளான் சேர,குலமுத்துப்பிள்ளைசேயனல்லையன்கூறினான்சிவகுருமாலை, தல மதிலுயர்ந்த திருச்செந்தூர்மாலை சாற்றினாரிதைப்படித்தோர்க்கே அலைச்சலை தவிர்ப்பாய்திருச்செந்திற்பதிவாழ்அரகராகுமரவேலவனே

கவலையாகாதே பிணியணுகாதே கலியினால்மெலிந்தலையாதே, உவமைகள்சொல்லிப்பெண்கள்பேசாதேயுலுத்தர்பால்நடந்தலையா தேறிதவமெனத்தோன்றி யென்கலிதீரசகலசம்பத்துமேயருள்வாய் அவதிதவிர்க்குந்திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. கள

பத்தர்கள்செய்தபிழையெலாம்பொறுத்துப் பரகதியருளுவா யெனவே,சத்தியமாகமுறையிடுஞ்சிறுவன் தப்பிதமானதிங்கேதோ புத்தியில்லாத தெனக்கொருத்தனுக்கோர் பூமியிலியாவர்க்கு முளை தோ அத்தனேகுகனேதிருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே

வஞ்சகர்சொல்லுநிந்தைக்குமென்றும்வருத்திடும்வறுமைக்கும் பொல்லாப், பஞ்சபாதகஞ்செய்மூடர்கள்மொழிக்கும் பஞ்சத்தினுற்படுந்துயர்க்கும், நெஞ்சகமெலிந்தசிறியனின்கவலை நீங்கவோர் நொடியினிலெய்தி, அஞ்சலென்றருள்வாய் திருச்செந்திற்பதிவாழ் அரகராகுமரவேலவனே. ௬௬

வேதாகமும்வாழி நான்மறையோர்வாழி விண்ணவர்களும்வாழி, மேதகுஞானக்குரவரும்வாழி மெய்ப்பரனடியவர்வாழி, தீதிலாறுபடைகளும்வாழி தேவிமாரிருவாழிவ தமிழ்திருச்தூரனுவாழி, யெழிற்குகனடியர்வாழியவே ௱

## திருச்செந்தூர்மாலை.

முற்றிற்று.